


தமிழ்நாடு அரசு

# தமிழ்

## இரண்டாம் வகுப்பு

தீண்டாமை
மனிதநேயமற்ற செயல் – பெருங்குற்றம்

## பள்ளிக் கல்வித்துறை

தமிழ்நாடு அரசு
இலவசப் பாடநூல் வழங்கும்
திட்டத்தின்கீழ் வெளியிடப்பட்டது
(விற்பனைக்கு அன்று)

முதல் பதிப்பு : தி.பி. 2042 ; ( 2011 )
( சமச்சீர்க் கல்வி – பொதுப் பாடத்திட்டத்தின்கீழ் வெளியிடப்பட்ட நூல் )

## பாடநூல் குழு

### குழுத்தலைவர்

முனைவர்.வெ.உஷாராணி, முதுநிலை விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், கிருஷ்ணகிரி.

### மேலாய்வாளர்கள்

திரு . இரா.பத்மநாபன், முதுநிலை விரிவுரையாளர்,மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், வடலூர் , கடலூர்.

செல்வி. தி.குறள்மதி, விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், புலிக்கரை , தருமபுரி - 636808.

### நூலாசிரியர்கள்

செல்வி. மு. சரஸ்வதி, இடைநிலை ஆசிரியர் ,ஊ. ஒ.ந.நி. பள்ளி,சென்னேரி , காஞ்சிபுரம் மாவட்டம்- 603108.

திருமதி.செள. மகேஸ்வரி, இடைநிலை ஆசிரியர், சென்னை தொடக்கப் பள்ளி, காக்ரேன் பேசின் சாலை, சென்னை-21.

திரு. ஏ. அருள் துரைசாமி, முதுகலைத் தமிழாசிரியர், அம்பேத்கார் அரசு மேனிலைப் பள்ளி, புளிச்சப்பள்ளம், விழுப்புரம்.

திரு . ச.ந. தட்சிணாமூர்த்தி, முதுகலைத் தமிழாசிரியர், அரசு பெண்கள் மேனிலைப் பள்ளி, திருத்தணி,திருவள்ளூர்.

திருமதி ச. ஜீவஜோதி, இடைநிலை ஆசிரியர், நகராட்சித் தொ.பள்ளி, திரு. வி. க. பாதை ,அம்மாப்பேட்டை, சேலம்.

திருமதி கா. ஜோதிலட்சுமி, இடைநிலை ஆசிரியர், ஊ. ஒ. தொ.பள்ளி தொட்டமெட்டறை, கிருஷ்ணகிரி மாவட்டம்.

---

கணினி அச்சு, வடிவமைப்பு : த.ரகு , மு.விஜயசாரதி ஓவியம், அட்டைப் படம் : அரஸ்

---

நூல் அச்சாக்கம்

தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம்,

கல்லூரிச் சாலை, சென்னை – 600 006.

---

விலை : ரூ.

இந்நூல் 80 ஜி. எஸ். எம். மேப்லித்தோ தாளில் அச்சிடப்பட்டுள்ளது.

ஆப்செட் முறையில் அச்சிட்டோர் :

## தேசிய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல பங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவ சுப நாமே ஜாகே
தவ சுப ஆசிஸ மாகே
காஹே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
ஜய ஹே ஜய ஹே ஜய ஹே
ஜய ஜய ஜய ஜய ஹே!

– மகாகவி இரவீந்திரநாத் தாகூர்

## நாட்டுப்பண் – பொருள்

இந்தியத் தாயே! மக்களின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற நீயே எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செய்கிறாய்.

நின் திருப்பெயர் பஞ்சாபையும், சிந்துவையும், கூர்ச்சரத்தையும், மராட்டியத்தையும், திராவிடத்தையும், ஒரிசாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

நின் திருப்பெயர் விந்திய, இமயமலைத் தொடர்களில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை ஆறுகளின் இன்னொலியில் ஒன்றுகிறது; இந்தியக் கடலலைகளால் வணங்கப்படுகிறது.

அவை நின்னருளை வேண்டுகின்றன; நின் புகழைப் பரவுகின்றன.

இந்தியாவின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற தாயே! உனக்கு
வெற்றி! வெற்றி! வெற்றி!

## தமிழ்த்தாய் வாழ்த்து

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே!
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!
தமிழணங்கே!
உன் சீரிளமைத் திறம் வியந்து
செயல் மறந்து வாழ்த்துதுமே! வாழ்த்துதுமே! வாழ்த்துதுமே!

– 'மனோன்மணியம்' பெ. சுந்தரனார்

## தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

'நாட்டின் உரிமை வாழ்வையும் ஒருமைப்பாட்டையும் பேணிக் காத்து வலுப்படுத்தச் செயற்படுவேன்' என்று உளமார நான் உறுதி கூறுகிறேன்.

'ஒருபோதும் வன்முறையை நாடேன்' என்றும், சமயம், மொழி, வட்டாரம் முதலியவை காரணமாக எழும் வேறுபாடுகளுக்கும் பூசல்களுக்கும் ஏனைய அரசியல் – பொருளாதாரக் குறைபாடுகளுக்கும் அமைதி நெறியிலும் அரசியல் அமைப்பின் வழியிலும் நின்று தீர்வு காண்பேன்' என்றும் நான் மேலும் உறுதியளிக்கிறேன்.

## உறுதிமொழி

'இந்தியா எனது நாடு. இந்தியர் அனைவரும் எனது உடன் பிறந்தவர்கள். என் நாட்டை நான் பெரிதும் நேசிக்கிறேன். இந்நாட்டின் பழம்பெருமைக்காகவும் பன்முக மரபுச் சிறப்புக்காகவும் நான் பெருமிதம் அடைகிறேன். இந்நாட்டின் பெருமைக்குத் தகுந்து விளங்கிட என்றும் பாடுபடுவேன்.

என்னுடைய பெற்றோர், ஆசிரியர்கள், எனக்கு வயதில் மூத்தோர் அனைவரையும் மதிப்பேன்; எல்லாரிடமும் அன்பும் மரியாதையும் காட்டுவேன்.

என் நாட்டிற்கும் என் மக்களுக்கும் உழைத்திட முனைந்து நிற்பேன். அவர்கள் நலமும் வளமும் பெறுவதிலேதான் என்றும் மகிழ்ச்சி காண்பேன்.

* மனப்பாடப் பகுதி

# 1. பசுவும் கன்றும்

தோட்டத்தில் மேயுது
வெள்ளைப் பசு – அங்கே
துள்ளிக் குதிக்குது
கன்றுக் குட்டி.



அம்மா என்குது
வெள்ளைப் பசு – உடன்
அண்டையில் ஓடுது
கன்றுக் குட்டி.



நாவால் நக்குது
வெள்ளைப் பசு – பாலை
நன்றாய்க் குடிக்குது
கன்றுக் குட்டி.

முத்தம் கொடுக்குது
வெள்ளைப் பசு – மடி
முட்டிக் குடிக்குது
கன்றுக் குட்டி.

- கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

## பயிற்சிகள்

### அ) வாய்மொழியாக விடை தருக.

1. பசு எங்கு மேய்ந்தது ?
2. கன்றுக்குட்டி என்னென்ன செய்தது ?
3. பசு எவ்வாறு கன்றுக்குட்டியிடம் அன்பு காட்டியது ?

### ஆ) பொருள் அறிக.

அண்டையில் – பக்கத்தில்

### இ) நிரப்புக.

பூனை – பூனைக்குட்டி
நாய் – ______________
முயல் – ______________
பசு – ______________

விலங்குகள், பறவைகள் பற்றிய பாடல்களைக் கேட்டறிந்து பாடுக.

## 2. பந்து எங்கே ?

படத்தைப் பார்த்து நிகழ்வைக் கூறுக.



①



②



③



④

## பயிற்சிகள்

அ) படங்களுக்கு வரிசை எண் இடுக.



கதை நிகழ்வை உன் பெற்றோரிடம் கூறி மகிழ்க.

ஆ) வண்ணம் தீட்டி மகிழ்க.









இ) நினைவு கூர்க. சொல்லிக்கொண்டே எழுதுக. சொல்லக் கேட்டு எழுதுக.

| க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

| ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

## ஈ) தமிழ் நெடுங்கணக்கு வரிசை அறிக.

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ங் | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| ச் | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| ஞ் | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
| ட் | ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| ண் | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| த் | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| ந் | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| ப் | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| ம் | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| ய் | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| ர் | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| ல் | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| வ் | வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
| ள் | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
| ற் | ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |
| ன் | ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |

# 3. யார்? யார்? யார்?



தொங்க விட்ட சட்டையைத்
தூக்கிக் கீழே போட்டவன்
யார், யார், யார்?
எழுதி வைத்த தாள்களை
இங்கும் அங்கும் இறைத்தவன்
யார், யார், யார்?
சன்னல் கதவைப் பட்டெனச்
சாத்தி விட்டுச் சென்றவன்
யார், யார், யார்?
அருகில் நிற்கும் மரங்களை
அசைத்தே ஆடச் செய்தவன்
யார், யார், யார்?
கண்டு
பிடிக்க
முடியுமா?
காண
முடியாக்
காற்றே தான்.

– அழ. வள்ளியப்பா

## பயிற்சிகள்

### அ) வாய்மொழியாக விடை தருக.

காற்று என்னவெல்லாம் செய்தது?

### ஆ) பொருள் அறிக.

| | | |
|---|---|---|
| தூக்கி | – | எடுத்து |
| தாள் | – | காகிதம் |
| காண முடியாத | – | பார்க்க முடியாத |
| அருகில் | – | பக்கத்தில் |

### இ) எதிர்ச்சொல் அறிக.

இங்கும் x அங்கும்
அருகில் x தொலைவில்
கீழே x மேலே

# 4. தவளையின் தந்திரம்

படத்தைப் பார்த்து நிகழ்வைக் கூறுக.



- கதை நிகழ்வை உன் பெற்றோரிடம் கூறி மகிழ்க.
- பெற்றோர்களிடமிருந்து எளிய கதைகளைக் கேட்டறிக. கேட்டவற்றை வகுப்பறையில் கூறுக.

# 5. பார்ப்போம் படிப்போம்



பொம்மை



கறிவேப்பிலை



மேசை



செம்பருத்தி



வேப்பமரம்



வானவில்



செல்பேசி



மௌவல்



உருளைக்கிழங்கு



வெண்டைக்காய்



வளையல்



அகல்விளக்கு



உண்டியல்



பௌவம்

## பயிற்சிகள்

அ) படம் பார்த்துப் பெயர் எழுதுக.

(சாமந்திப்பூ, தொலைபேசி, நீர்யானை, பள்ளி, கடற்கரை, ஊஞ்சல், கத்தரிக்காய், வாழைப்பழம், தொட்டில், தென்னை மரம்.)

 ______________

 ______________

 ______________

 ______________

 ______________

 ______________

 ______________

 ______________

 ______________

 ______________

ஆ) பள்ளிக்குச் செல்லும் வழியில் நீ பார்த்த பொருள்களின் பெயர்களை எழுதுக.

1. ______________ 2. ______________

3. ______________ 4. ______________

5. ______________ 6. ______________

இ) எழுத்துகளை இணைத்துச் சொல் உருவாக்குக.

| | | |
|---|---|---|
| ஊ / போ | ட் | டி |

ஊட்டி
போட்டி

| | | |
|---|---|---|
| பா | ட் | டு / டி |

______________________
______________________

| | | |
|---|---|---|
| க | த / ன | வு |

______________________
______________________

| | | |
|---|---|---|
| பூ | ண் / ட் | டு |

______________________
______________________

| | | |
|---|---|---|
| பு | ட | வை / லை |

______________________
______________________

| | | | |
|---|---|---|---|
| வி / ம | ரு | ந் | து |

______________________
______________________

ஈ) எழுத்துகளை இணைத்துச் சொல் உருவாக்குக.

கா — து, டு, ல், சு, ளை

1. __________
2. __________
3. __________
4. __________
5. __________

மு, சொ, கொ, ம, ப — த்து

1. __________
2. __________
3. __________
4. __________
5. __________

உ) கொடுக்கப்பட்டுள்ள படங்களின் பெயர்களை உரிய கட்டங்களில் நிரப்புக.

இடமிருந்து வலம்





மேலிருந்து கீழ்








மேலிருந்து கீழ்









இடமிருந்து வலம்





ஊ) இரண்டாவது எழுத்தை நீக்கிப் புதிய சொல்லை உருவாக்குக.

நாடகம் – நாகம்

பழக்கம் – ____________.

புதையல் – ____________.

மகுடம் – ____________.

பாக்கு – ____________.

ஏ) உரிய ஒலிப்புடன் படித்துப் பழகுக.



செங்காந்தள்



குவளை



வெட்சி



வாகை



வகுளம்



ஆவிரை



சண்பகம்



முல்லை



கைதை



கொன்றை



ஆத்தி



அவரை

ஏ) படத்துடன் பெயரைப் பொருத்துக.



பூங்கா



மடிக் கணினி



வானூர்தி



முழுநிலவு



ஒட்டகச்சிவிங்கி



பேருந்து

ஐ ) கீழ்க்காணும் சொற்களைக் ககர வரிசையில் எழுதுக.

கேளூர், கிண்டி, கோவை, குன்னூர், கடலூர், கீரனூர், காரைக்குடி, கைலாயபுரம், கெடிலம், கொடுமுடி, கூடலூர், கௌதமபுரி.

| | | | |
|---|---|---|---|
| க | | கா | |
| கி | | கீ | |
| கு | | கூ | |
| கெ | | கே | |
| கை | | கொ | |
| கோ | | கௌ | |

ஒ) படம் பார்த்துப் பறவைகள், விலங்குகளின் பெயர்களை எழுதுக.



# 6. வீடு எங்கே ?

குட்டிக்குரங்கு வீடு கட்டியது
தோசைதான் வீட்டின் தரை!
வாழைப்பழங்களே வீட்டின் தூண்கள்.
வெல்லம் தான் சுவர்.
முறுக்குதான் சன்னல்.
அப்பளமே கூரை.
எறும்பு வந்தது,
எலி வந்தது,
பூனை வந்தது,
காகம் வந்தது,
வீடு எங்கே போனது ?



## பயிற்சிகள்

### அ) வாய்மொழியாக விடை தருக.

1. வீடு கட்டியது யார் ?
2. குட்டிக்குரங்கு கட்டிய வீட்டிற்கு யார்யாரெல்லாம் வந்தார்கள் ?

### ஆ) நிரப்புக.

குரங்கு கட்டிய வீட்டின்

| | | |
|---|---|---|
| தரை | – | தோசை |
| தூண்கள் | – | ________ |
| சுவர் | – | ________ |
| சன்னல் | – | ________ |
| கூரை | – | ________ |

### இ) சொல்லிக்கொண்டே எழுதுக. சொல்லக் கேட்டு எழுதுக.

| | | | | |
|---|---|---|---|---|
| வீடு | தரை | தூண்கள் | சுவர் | சன்னல் |
| ________ | ________ | ________ | ________ | ________ |
| கூரை | எறும்பு | எலி | பூனை | வீடு |
| ________ | ________ | ________ | ________ | ________ |

# 7. என்னைப் பற்றி நானே...



கோடை விடுமுறை முடிந்தது. பள்ளியின் முதல் நாள். மாணவர்கள் மகிழ்ச்சியோடு பள்ளிக்கு வந்தார்கள். மணி ஒலித்தது, ஆசிரியர் வகுப்பறைக்கு வந்தார். மாணவர்கள் எழுந்து நின்று, ஆசிரியருக்கு வணக்கம் கூறினார்கள்.



ஆசிரியர் முதலில் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார். அவ்வகுப்பில் கபிலன், எழிலரசி என்ற இருவரும் புதிதாகச் சேர்ந்திருந்தார்கள். அவர்களும் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டார்கள்.



**கபிலன் :** என் பெயர் கபிலன். என் ஊர் தருமபுரி. நான் இரண்டாம் வகுப்பில் படிக்கிறேன். எனக்கு மட்டைப்பந்து விளையாடுவது மிகவும் பிடிக்கும். எங்கள் வீட்டில் ஒரு நாய் வளர்க்கிறோம். அதன் பெயர் 'சின்னு.' அது ரொட்டித்துண்டுகளை விரும்பித் தின்னும். சின்னுவுடன் விளையாடுவது எனக்கு மிகவும் பிடிக்கும்.



எழிலரசி : என் பெயர் எழிலரசி. எனது ஊர் காஞ்சிபுரம். நான் இரண்டாம் வகுப்பில் படிக்கிறேன். எனக்கு ஓவியம் வரைவது மிகவும் பிடிக்கும். நான் ஒரு பூனைக்குட்டி வளர்க்கிறேன். அது கருப்பும் வெள்ளையும் கலந்த நிறத்தில் அழகாக இருக்கும். அதைப் 'பட்டு' என்று செல்லமாக அழைப்போம். பட்டுவுக்கு மிகவும் பிடித்தது பால் சோறுதான்.

இதேபோல் வகுப்பில் மற்ற மாணவர்களும் தங்களை அறிமுகம் செய்து கொண்டனர். நீயும் உன்னை அறிமுகப்படுத்திக் கொள்க.

## பயிற்சிகள்

### அ) பொருள் அறிக.

நிறம் – வண்ணம்

### ஆ) எதிர்ச்சொல் அறிக.

| | | |
|---|---|---|
| தொடங்கியது | x | முடிந்தது |
| பழைய | x | புதிய |
| பிடிக்கும் | x | பிடிக்காது |

### இ) இவை பேசினால் தம்மை எவ்வாறு அறிமுகப்படுத்திக் கொள்ளும்?



என் பெயர் சின்னு. நான் ரொட்டித் துண்டுகளை விரும்பித் தின்னுவேன். கபிலனுடன் விளையாடுவது எனக்கு மிகவும் பிடிக்கும்.

கபிலனின் நாய்

எழிலரசியின் பூனை



______________________________

______________________________

______________________________

### ஈ) சொல்லிக்கொண்டே எழுதுக. சொல்லக் கேட்டு எழுதுக.

| | | | |
|---|---|---|---|
| கோடை விடுமுறை | மாணவர்கள் | மணி ஒலித்தது | மிகவும் பிடிக்கும் |
| ________ | ________ | ________ | ________ |
| இரண்டாம் வகுப்பு | மட்டைப்பந்து | ஓவியம் | அறிமுகம் |
| ________ | ________ | ________ | ________ |

உ) படத்திலுள்ள நிகழ்வுகளைப் பற்றிப் பேசுக.



குறிப்பு : மாணவர்கள் முழுமையான தொடர்களைப் பயன்படுத்தி இயல்பாகப் பேசும் வகையில் ஆசிரியர் சிறு சிறு வினாக்கள் கேட்கவும்.

# 8. சேவல் கூவுது!



கூரை ஏறி வீரன் போலக்
கொண்டைச் சேவல் கூவுது! – தீக்
கொண்டைச் சேவல் கூவுது!
ஊரை எழுப்பி விட்டுப் பின்னும்
யாரை எழுப்பக் கூவுது! – இன்னும்
யாரை எழுப்பக் கூவுது?



கூரை மீது நடை நடந்து
குனிந்து நிமிர்ந்து பார்க்குது! – செங்
கொண்டை குலுக்கி ஆர்க்குது!
போருக் கேகும் மறவன் போல
யாருக் காக நடக்குது? – சேவல்
யாருக் காக நடக்குது?

– வாணிதாசன்

## பயிற்சிகள்

### அ) பொருள் அறிக.

குலுக்கி – அசைத்து
ஆர்க்குது – கொக்கரிக்கிறது
ஏகும் – செல்லும்
மறவன் – வீரன்

### ஆ) எதிர்ச்சொல் அறிக.

ஏறி x இறங்கி
குனிந்து x நிமிர்ந்து

### இ) விடை தருக.

1. கொண்டைச் சேவல் எப்படிக் கூவுகிறது?
2. சேவல் யாரைப்போல நடக்கிறது?

### ஈ) சொல்லிக் கொண்டே எழுதுக. சொல்லக்கேட்டு எழுதுக.

| | | | |
|---|---|---|---|
| கூரை | வீரன் | மறவன் | கொண்டைச்சேவல் |
| ______ | ______ | ______ | ______ |
| குனிந்து | நிமிர்ந்து | ஆர்க்குது | யாருக்காக |
| ______ | ______ | ______ | ______ |

✸ பறவைகள், விலங்குகள் பற்றிய பாடல்களைப் பாடுக.

# 9. வழி பிறந்தது






மூவரும் ஆற்றைக் கடந்தனர்.









காற்றும் நின்றது.




❀ நீ பிறருக்கு உதவி செய்திருக்கிறாயா? என்ன உதவி? யாருக்கு? கூறுக.

## பயிற்சிகள்

அ) கொடுக்கப்பட்டுள்ள சொற்களைப் பகர வரிசையில் நிரப்புக.



பூண்டு

புடவை

பையன்

பட்டு

பேயன்

போர்வை

பாக்கு

பிட்டு

பௌவம்

பீடம்

பொட்டு

பெட்டி



ஆ) சொற்றொடரைப் படித்துப் பழகுக.



வண்ணத்துப்பூச்சி அழகானது.



பாகற்காய் உடலுக்கு நல்லது.



மீனவர் மீன் பிடிக்கிறார்.



நெசவாளர் துணி நெய்கிறார்.



மருத்துவர் பரிசோதிக்கிறார்.



பழச்சாறு சத்து மிகுந்தது.



மிதிவண்டியில் பள்ளி செல்லலாம்.



குதிரை, வண்டி இழுக்கிறது.



தொடர்வண்டி நீளமாக இருக்கும்.



முருங்கைக்கீரை உடலுக்கு நல்லது.



பலாப்பழம் இனிக்கும்.



யாழ் பழங்கால ஒரு இசைக் கருவி.



நத்தை மெதுவாக நகரும்.



நமது நாட்டுக்கொடி மூன்று வண்ணங்கள் கொண்டது.

## இ) தொடர்களை உரிய ஒலிப்புடன் படித்துப் பழகுக, எழுதுக.

1. நாள்தோறும் பல்துலக்குவோம். ______
2. சுத்தமான ஆடைகளை அணிவோம். ______
3. காலணி அணிந்து நடப்போம். ______
4. நகத்தைச் சுத்தமாக வைத்திருப்போம். ______
5. சத்துள்ள உணவுகளை உண்போம். ______
6. குடிநீரைக் காய்ச்சிக் குடிப்போம். ______
7. கூடி விளையாடுவோம். ______
8. வரிசையில் நிற்போம். ______
9. உயிர்களிடம் அன்பாய் இருப்போம். ______
10. மழைநீரைச் சேமிப்போம். ______

## ஈ) குறிப்புகளைப் பயன்படுத்தித் தொடர்களை நிறைவு செய்க.



( பூனை, நாய், அவரை, எறும்பு )





1. ____________ வீட்டைக் காக்கும்.
2. ____________ எலியைப் பிடிக்கும்.
3. ____________ ஊர்ந்து செல்லும்.
4. ____________ கொடியில் காய்க்கும்.



## உ) கீழ்க்காணும் சொற்களை வகைப்படுத்துக.

புறா, குரங்கு, மல்லிகை, கோழி, செம்பருத்தி, சிங்கம், கழுகு, அல்லி, முள்ளம்பன்றி, தாமரை, யானை, காகம், சாமந்தி, கிளி, ஒட்டகம்.

| பூக்கள் | விலங்குகள் | பறவைகள் |
|---|---|---|
| | | |

ஊ) படத்திற்குப் பொருத்தமான சொற்களை எழுதித் தொடர்களை நிரப்புக.



________________ தோகை விரித்து ஆடுகிறது.



________________ புத்தகம் படிக்கிறார்கள்.



________________ விரைவாக ஓடுகிறது .



________________ விளையாடுகிறார்கள்.



________________ குளத்தில் குளிக்கிறது .

எ) கீழ்க்காணும் சொற்களைக் கட்டங்களில் நிரப்புக.

ஒட்டகம், பட்டம், கரடி, காகம், கழுகு, குளவி.



## ஏ) பொருத்தமான சொற்களை எழுதித் தொடர்களை நிரப்புக.



________________ கூவுகிறது.



________________ நீரில் நீந்துகின்றன.



________________ ஊளையிடுகிறது.



________________ தத்துகிறது.



________________ பால் குடிக்கிறது.

## ஐ) குறிப்புகளைப் பயன்படுத்தித் தொடர் எழுதுக.

| | | |
|---|---|---|
| காகம்<br>பட்டம்<br>பருந்து | வானில்<br>கூடு | பறக்கும்<br>கட்டும் |

1. ________________
2. ________________
3. ________________
4. ________________
5. ________________

ஓ) படத்தைப் பார்த்துச் சிறுதொடர் எழுதுக.



______________________________



______________________________



______________________________



______________________________

ஓ) தொடர் உருவாக்குக.

| | | |
|---|---|---|
| கமலி<br>மணியன்<br>தேவி<br>முகிலன் | பாண்டி<br>பொம்மை | செய்தான்<br>விளையாடினாள்<br>விளையாடினான்<br>செய்தாள் |

<u>கமலி பொம்மை செய்தாள்.</u>

______________________________

______________________________

______________________________

______________________________

______________________________

______________________________

# 10. நாடிப் பயில்வோம்!



தேனி ருக்கும் இடத்தினைத்
        தேடி மொய்க்கும் வண்டு போல்,
சீனியுள்ள இடத்தினைத்
        தேடி ஊரும் எறும்பு போல்,

பழம் நிறைந்த சோலையைப்
        பார்த்துச் செல்லும் கிளியே போல்,
வளம் நிறைந்த நாட்டிலே
        வந்து சேரும் மக்கள் போல்,

பள்ள மான இடத்தினைப்
        பார்த்துப் பாயும் வெள்ளம்போல்,
நல்ல நல்ல நூல்களை
        நாடி நாமும் பயிலுவோம்.

– அழ. வள்ளியப்பா

## பயிற்சிகள்

அ) பாடலை உரிய ஒலிப்புடன் பாடிப் பழகுக.

ஆ) பொருள் அறிக.

| | | |
|---|---|---|
| ஊரும் | – | மெதுவாக நகரும் |
| சீனி | – | சர்க்கரை |
| வளம் | – | செல்வம் |
| நாடி | – | விரும்பி |
| நூல் | – | புத்தகம் |
| பயில்வோம் | – | கற்போம் |

இ) எதிர்ச்சொல் அறிக.

| | | |
|---|---|---|
| நிறைந்த | x | குறைந்த |
| வந்து | x | சென்று |
| பள்ளம் | x | மேடு |
| நல்ல | x | கெட்ட |

### ஈ) சொல்லிக் கொண்டே எழுதுக. சொல்லக் கேட்டு எழுதுக.

| | | |
|---|---|---|
| தேனி | சீனி | சோலை |
| ________ | ________ | ________ |
| பள்ளம் | வண்டு | எறும்பு |
| ________ | ________ | ________ |
| வளம் | மக்கள் | வெள்ளம் |
| ________ | ________ | ________ |
| தேடி மொய்க்கும் | தேடி ஊரும் | பார்த்துச் செல்லும் |
| ________ | ________ | ________ |
| வந்து சேரும் | பார்த்துப் பாயும் | நாமும் பயிலுவோம் |
| ________ | ________ | ________ |

### உ) உரிய ஒலிப்புடன் படித்துப் பழகுக. சொல்லக் கேட்டு எழுதுக.

| லை | ழை | ளை |
|---|---|---|
| இலை | இழை | இளை |
| தலை | தழை | தளை |
| கலை | கழை | களை |
| விலை | விழை | விளை |

### ஊ) பலமுறை சொல்லிப் பழகுக.

பலாப்பழம் பழுத்துப் பள்ளத்தில் விழுந்தது.
கூழானாலும் குளித்துக் குடி.
பண்டம் ஏற்றிச் சென்ற வண்டியைக் கண்டேன்.
முருகன் ஆற்றங்கரைக்குச் சென்றான்.

உரிய ஒலிப்புடன் படித்துப் பழகுக.

ஆற்றில் வருவது வெள்ளம்.
இனிப்பாய் இருப்பது வெல்லம்.

மரத்தை அறுப்பது வாள்.
மாட்டிற்கு இருப்பது வால்.

வீட்டில் வளர்ப்பது கோழி.
விளையாட உதவுவது கோலி.

வனத்தில் இருப்பது புலி.
மரத்தில் காய்ப்பது புளி.

ஒன்றில் பாதி அரை.
வீட்டில் உள்ளது அறை.

சுவரில் இருப்பது பல்லி.
கல்வி தருவது பள்ளி.

சூரியன் உதிப்பது காலை.
ஏரில் பூட்டுவது காளை.

நீரைத் தருவது மழை.
நிமிர்ந்து நிற்பது மலை.

ஆற்றின் ஓரம் கரை.
ஆடையில் படிவது கறை.

மாதத்தில் ஒன்று ஆனி.
மரத்தில் அடிப்பது ஆணி.

## பயிற்சிகள்

அ) சொல்லிக் கொண்டே எழுதுக. சொல்லக் கேட்டு எழுதுக.

| | | | |
|---|---|---|---|
| வெள்ளம் | வெல்லம் | வாள் | வால் |
| ______ | ______ | ______ | ______ |
| கோழி | கோலி | புலி | புளி |
| ______ | ______ | ______ | ______ |
| அரை | அறை | பல்லி | பள்ளி |
| ______ | ______ | ______ | ______ |
| காலை | காளை | மழை | மலை |
| ______ | ______ | ______ | ______ |
| கரை | கறை | ஆனி | ஆணி |
| ______ | ______ | ______ | ______ |

ஆ) படத்திற்கேற்ற சொல்லை அடிக்கோடிடுக. எடுத்து எழுதுக.


புலி / புளி

______________


பரவை / பறவை

______________


கோழி / கோலி

______________


தவளை / தவலை

______________


வளை / வலை

______________


பள்ளி / பல்லி

______________


காலை / காளை

______________


மழை / மலை

______________

இ) பொருத்தமான சொல்லைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. மாடு______________மேயும். ( புள் / புல் )
2. குரங்குக்கு ______________ உண்டு. ( வாள் / வால் )
3. தென்னை ______________ உயரமானது. ( மரம் / மறம் )
4. கோழி______________தேடும். ( இறை / இரை )
5. ஆடு ______________ தின்னும். ( தழை / தலை )
6. பசு______________ கொடுக்கும். ( பால் / பாழ் )
7. நிலவு______________ தரும். ( ஒளி / ஒலி )
8. இனிப்பாய் இருப்பது______________ ( வெல்லம் / வெள்ளம் )
9. வானத்தின் நிறம் ______________ ( நீளம் / நீலம் )
10. ஆற்றின் ஓரம் ______________ (கரை / கறை)

# 11. சிறிய கோடு, பெரிய கோடு.

ஒரு நாட்டில் ஓர் அரசர் இருந்தார். அவர் நாள்தோறும் அரசவையில் ஒரு புதிரைக் கூறுவார். உரிய விடை கூறுபவருக்குப் பரிசு வழங்குவார்.

ஒரு நாள், அரசர் கரித்துண்டை எடுத்துத் தரையில் கோடு ஒன்றை வரைந்தார்.



“இந்தக் கோட்டை அழிக்கக் கூடாது. ஆனால், சிறிய கோடாக மாற்ற வேண்டும்” என்றார்.

எல்லாரும் என்ன செய்வது ? என்று சிந்தித்தனர், “எங்களால் முடியாது” என்றனர். அதுமட்டுமன்றி, “யாராலும் இந்தக் கோட்டை அழிக்காமல் சிறிய கோடாக்க முடியாது” என்று கூறிவிட்டனர்.

ஆனால், அமைச்சர் மட்டும் எழுந்தார். “என்னால் முடியும்” என்றார். சொன்னது போலவே செய்தும் காட்டினார். அரசர் வரைந்தகோடு, சிறிய கோடு ஆகிவிட்டதைக் கண்டு அனைவரும் வியந்தனர். அரசர் அமைச்சரைப் பாராட்டினார். அவருக்குப் பரிசும் வழங்கினார். அமைச்சர், கோட்டை அழிக்காமல், சிறிய கோடாக எப்படி மாற்றினார் ?

அரசர் வரைந்த கோட்டிற்குப் பக்கத்தில், பெரிய கோடு ஒன்றை அமைச்சர் வரைந்தார். அதனால், அரசர் வரைந்த கோடு, சிறிய கோடு ஆகிவிட்டது.

## பயிற்சிகள்

### அ) பொருள் அறிக.

நாள்தோறும் - ஒவ்வொரு நாளும்

### ஆ) எதிர்ச்சொல் அறிக.

சிறிய x பெரிய

சரி x தவறு

வினா x விடை

முடியும் x முடியாது

### இ) சொல்லிக்கொண்டே எழுதுக. சொல்லக் கேட்டு எழுதுக.

| | | | |
|---|---|---|---|
| அரசர் | நாள்தோறும் | அரசவை | கரித்துண்டு |
| ________ | ________ | ________ | ________ |
| எல்லாரும் | அமைச்சர் | அனைவரும் | பாராட்டினார். |
| ________ | ________ | ________ | ________ |

### ஈ) கட்டங்களில் உள்ள பறவை, விலங்குகளின் பெயர்களைக் கண்டுபிடித்து எழுதுக.

| | | | | |
|---|---|---|---|---|
| கு | யி | ல் | யா | னை |
| பு | லி | கா | க | ம் |
| ஒ | ட் | ட | க | ம் |
| க | ர | டி | மை | னா |
| சி | ங் | க | ம் | ஈ |

குயில்

________________ ________________

________________ ________________

________________ ________________

________________ ________________

## உ) விடுகதைக்கு விடை கூறுக.





1. கை உண்டு; பிடிக்க முடியாது
   கால் உண்டு; நடக்க முடியாது. – அது என்ன ?

2. காலில்லை; வெகுதூரம் செல்வான்
   வாயில்லை; செய்தி பல சொல்வான். – அவன் யார் ?



3. படுத்து உறங்காத மிருகம்
   பந்தயத்தில் ஓட்டம் அதிகம். – அது என்ன ?





4. சீப்பு உண்டு; தலை வார முடியாது.
   பூ உண்டு ; மாலை கட்ட உதவாது. – அது என்ன ?

5. ஒற்றைக்காது உடையவன்
   ஒல்லியான மனிதன் ;
   ஓடி ஓடி இணைப்பான். – அவன் யார் ?





6. ஆகாய நீர் கொட்டும்போது
   ஆளைக் காக்க மலருவான். – அவன் யார் ?

7. உயிரில்லாப் பறவை
   ஊர் ஊராய்ப் பறக்கும். – அது என்ன ?

❀ உனக்குத் தெரிந்த விடுகதைகள் இரண்டனைக் கூறுக.

## என்னைத் தெரியுமா ?

ஊ) விடைக்கான படத்தைக் (✓) குறியிட்டுக் காட்டுக.

1. பட்டுச் சட்டை போட்டிருப்பேன்.
பார்வைக்கு அழகாய் நானிருப்பேன்.
தேனை விரும்பிக் குடித்திடுவேன்.





2. பல வடிவங்களில் நான் இருப்பேன்.
நீரின் மேல் மிதந்திடுவேன்.
வெயில் பட்டால் உருகிடுவேன்.





3. ஒற்றைக் காலில் சுழன்றிடுவேன்.
சிறுவர்களை மகிழ்விப்பேன்.
தலை சுற்றி விழுந்திடுவேன்.





4. பயணம் செய்ய உதவிடுவேன்.
சக்கரத்தால் நகர்ந்திடுவேன்.
எரிபொருள் இன்றி இயங்கிடுவேன்.





5. அழகாய் நானும் தோன்றிடுவேன்.
வண்ணம் பலவும் கொண்டிருப்பேன்.
நன்றாய் நடனம் ஆடிடுவேன்.





# 12. கண்டதும் கேட்டதும்

**கண்மணி:** வாணி! நான் நேற்று மாலை, தொலைக்காட்சியில் யானை, சிங்கம், புலி, வரிக்குதிரை, கரடி, பெரிய மலைப்பாம்பு முதலியவற்றைப் பார்த்தேன்.

**வாணி :** அப்படியா! நானும், பாட்டுப்போட்டி நிகழ்ச்சி ஒன்றைப் பார்த்தேன். நாமெல்லாம் முதல் வகுப்பில் பாடிய மழைப் பாடலை, ஒரு குழந்தை அழகாகப் பாடியது.



**குமரன் :** நான் பார்த்தது என்ன, தெரியுமா? விளையாட்டு நிகழ்ச்சியில் 'ஓட்டப்பந்தயம்' பார்த்தேன். ஒவ்வொருவரும் எவ்வளவு விரைவாக ஓடினார்கள் தெரியுமா? போட்டி முடிந்ததும் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசு கொடுத்தார்கள்.



**மணியன் :** நேற்று, நான் ஒரு பொம்மலாட்ட நிகழ்ச்சியைப் பார்த்தேன். பொம்மைகள் கைகால்களை அசைத்து அழகாக ஆடின.

மேகலை: எனக்குச் சித்திரக்கதை நிகழ்ச்சிதான் மிகவும் பிடிக்கும். அந்த நிகழ்ச்சியில் விலங்குகள், பறவைகள் எல்லாம் பேசும்; விளையாடும். பார்ப்பதற்கு வேடிக்கையாக இருக்கும்.



நீ, விரும்பிப் பார்க்கும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் என்னென்ன? வகுப்பறையில் பகிர்ந்து கொள்க.



## பயிற்சிகள்

### அ) பொருள் அறிக.

பந்தயம் – போட்டி

### ஆ) எதிர்ச் சொல் அறிக.

| | | |
|---|---|---|
| பெரிய | x | சிறிய |
| விரைவாக | x | மெதுவாக |
| வெற்றி | x | தோல்வி |

### இ) சொல்லிக்கொண்டே எழுதுக. சொல்லக் கேட்டு எழுதுக.

| | | |
|---|---|---|
| தொலைக்காட்சி | பொம்மலாட்டம் | பொம்மைகள் |
| ________ | ________ | ________ |
| வரிக்குதிரை | ஓட்டப்பந்தயம் | விளையாட்டு |
| ________ | ________ | ________ |
| சித்திரக்கதை | விலங்குகள் | பறவைகள் |
| ________ | ________ | ________ |

# 13. ஓடி விளையாடு பாப்பா



ஓடி விளையாடு பாப்பா – நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா – ஒரு
குழந்தையை வையாதே பாப்பா.

காலை எழுந்தவுடன் படிப்பு – பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு – என்று
வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா.

உயிர்க ளிடத்தில் அன்புவேணும் – தெய்வம்
உண்மை என்று தானறிதல் வேணும்
வயிர முடைய நெஞ்சு வேணும் – இது
வாழும் முறைமையடி பாப்பா!

– மகாகவி சி. சுப்பிரமணிய பாரதியார்

## பயிற்சிகள்

அ) பாடலை உரிய ஒலிப்புடன் பாடிப் பழகுக.

ஆ) பொருள் அறிக.

| | | | |
|---|---|---|---|
| ஓய்ந்து | - சோர்ந்து | முறைமை | - வழிமுறை |
| வையாதே | - திட்டாதே | நெஞ்சு | - உள்ளம் |
| வயிரமுடைய | - உறுதியுடைய | வேணும் | - வேண்டும் |

இ) பாடலில் இரண்டாம் எழுத்து ஒன்று போல் உள்ள சொற்களை எடுத்து எழுதுக.

ஓடி ________ காலை ________ உயிர்கள் ________

ஈ) சொல்லிக்கொண்டே எழுதுக. சொல்லக் கேட்டு எழுதுக.

| | | | | |
|---|---|---|---|---|
| விளையாட்டு | பாப்பா | கூடி | கனிவு | காலை |
| ________ | ________ | ________ | ________ | ________ |
| படிப்பு | பாட்டு | மாலை | வழக்கம் | உண்மை |
| ________ | ________ | ________ | ________ | ________ |

உ) ம, மா வரிசையில் சொற்களை எழுதுக.

மான், மைனா, மிதிவண்டி, மூங்கில், மௌலி, மேகம், முருங்கை, மீனவர், மெத்தை, மோதிரம், மணி, மொட்டு

## செயல் திட்டம்

கீழ்க்காணும் சொற்களுக்குரிய படங்களைப் படத்தொகுப்பில் ஒட்டுக.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மத்தளம் | மாம்பழம் | மின்விளக்கு | மீன் | முட்டை | மூங்கில் |
| மெத்தை | மேசை | மைக்கூடு | மொட்டு | மோதிரம் | மௌவல் |

# 14. நானும் கூட...


நான் முட்டையிலிருந்து வெளியே வந்துவிட்டேன்.
நானும் கூட முட்டையிலிருந்து வெளியே வந்து விட்டேன்


நான் ஊரைச் சுற்றிப்பார்க்கப் போகிறேன்.
நானும்கூடப் , போகிறேன்.


எனக்குப் பசிக்கிறது.
எனக்கும்கூடப், பசிக்கிறது.




**அடுத்து என்ன நடந்திருக்கும்?**

சிறு குழுவில் கலந்துரையாடுக.

## பயிற்சிகள்

அ) படங்களுக்குப் பொருத்தமான தொடர்கள் எழுதுக.



வாத்துக்குஞ்சும் கோழிக்குஞ்சும் முட்டைகளிலிருந்து வெளியே வந்தன.











ஆ) விரலில் மை தொட்டு அச்சிட்டு மகிழ்க.



இ) கொடுக்கப்பட்ட சொற்களுக்கேற்ப விரலில் மை தொட்டு அச்சிடுக.

வண்ணத்துப்பூச்சி மீன்

யானை கோழிக்குஞ்சு

ஈ) விரலில் வண்ண மை தொட்டு விருப்பம்போல் அச்சிட்டு மகிழ்க.

# 15. சட்டை யாருக்கு?



நான்கு குரங்குகள் மரக்கிளைகளில் தாவித்தாவி விளையாடிக் கொண்டிருந்தன. அப்போது சட்டை ஒன்றைக் கண்டன. அந்தச் சட்டையைப் போட்டுக்கொள்ள ஒவ்வொரு குரங்குக்கும் ஆசை. ஒரு போட்டி வைக்கலாம், அதில் யார் வெற்றி பெறுகிறாரோ அவர் அந்தச் சட்டையைப் போட்டுக் கொள்ளலாம் என முடிவு செய்தன.



இரவு முழுவதும் பேசவும் கூடாது, தூங்கவும் கூடாது என்பதுதான் அந்தப் போட்டி. இரவு வந்தது. குரங்குகள் ஒரு மெழுகுவத்தியை ஏற்றி வைத்தன. அதைச் சுற்றி அமர்ந்து கொண்டன. ஒன்றை ஒன்று பார்த்துக் கொண்டன.



ஆனால், எதுவும் பேசிக் கொள்ளவில்லை. ஒரே அமைதி! நேரம் கடந்து கொண்டிருந்தது. திடீரெனக் காற்று வீசியது. மெழுகுவத்தி அணைந்துவிட்டது.

"அடடே! மெழுகுவத்தி அணைந்துவிட்டதே!" என்றது ஒரு குரங்கு. "பேசாதே! நாம் இன்னொரு மெழுகுவத்தியை ஏற்றலாம்" என்றது மற்றொரு குரங்கு.





"சத்தம் போடாதே! எனக்குத் தொல்லையாக இருக்கிறது" என்றது மூன்றாவது குரங்கு.



"நீங்கள் எல்லாரும் பேசிவிட்டீர்கள். நான் மட்டும்தான் பேசவில்லை" என்றது நான்காவது குரங்கு.

சட்டை யாருக்குக் கிடைத்திருக்கும்?

அடுத்து என்ன நடந்திருக்கும்?

## பயிற்சிகள்

### அ) பொருள் அறிக.

கண்டன – பார்த்தன

அமர்ந்து – உட்கார்ந்து

தொல்லை – துன்பம்

### ஆ) எதிர்ச்சொல் அறிக.

பகல் x இரவு

வெற்றி x தோல்வி

அமைதி x சத்தம்

### இ) சொல்லிக்கொண்டே எழுதுக. சொல்லக் கேட்டு எழுதுக.

| | | | |
|---|---|---|---|
| மரக்கிளை | சட்டை | மெழுகுவத்தி | முடிவு செய்தன |
| ____________ | ____________ | ____________ | ____________ |
| இரவு வந்தது | காற்று வீசியது | பேசக்கூடாது | சத்தம்போடாதே |
| ____________ | ____________ | ____________ | ____________ |

முதல் சொல்லின் இறுதி எழுத்து அடுத்த சொல்லின் முதல் எழுத்தாக அமைவதைப் பார்!

அ)


விளக்கு


குருவி


விசிறி

ஆ)


படகு


கும்மி


மிதிவண்டி

இ) அம்மி, மிளகு, குரங்கு, குருவி, விருந்து, தும்பி, பிரம்பு, புறா.

ஈ) அம்மா, மாசி, சிறகு, குளவி, விலங்கு, குழவி, விளக்கு, குடை.

உ) அமுது, தும்பி, பிரம்பு, புடவை, வைகாசி, சிறகு, குடகு, குருவி.

ஊ) விறகு, குரங்கு, குகை, கைப்பேசி, சிகப்பு, புகை, கைத்தடி.

ஏ) முடியும் எழுத்தில் தொடங்கும் சொற்களை எடுத்து எழுதுக.













ஏ) சொல்லின் இறுதி எழுத்து அடுத்த சொல்லின் முதல் எழுத்தாக அமையும்படி கட்டங்களை நிரப்புக.

குளவி, துளசி, குருவி, சிறகு, மிளகு, விருந்து, கும்மி



ஐ) சொல்லின் இறுதி எழுத்து அடுத்த சொல்லின் முதல் எழுத்தாக அமையுமாறு கட்டங்களில் நிரப்புக.

குளவி, குழம்பு, புளிப்பு, விலங்கு,

| | | | |
|---|---|---|---|
| | | | |

ஒ) சொல்லின் இறுதி எழுத்து அடுத்த சொல்லின் முதல் எழுத்தாக அமையுமாறு சொற்களை எழுதுக.

1. அப்பா ____________

____________

____________

____________

2. பசு ____________

____________

____________

____________

3. சிறகு ____________

____________

____________

____________

## 16. கண்ணே! மணியே!



கண்ணே! மணியே! முத்தம் தா,
கட்டிக் கரும்பே! முத்தம் தா,
வண்ணக் கிளியே! முத்தம் தா,
வாசக் கொழுந்தே! முத்தம் தா,

தேனே! பாலே! முத்தம் தா,
தெவிட்டாக்கனியே! முத்தம் தா
மானே! மயிலே! முத்தம் தா
மடியில் வந்து முத்தம் தா.

– கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

### பயிற்சிகள்

அ) பாடலில் குழந்தையை எவ்வாறெல்லாம் அழைக்கிறார்கள்? எழுதுக.

கண்ணே! ______________

______________ ______________

______________ ______________

______________ ______________

______________ ______________

ஆ) பாடலில் உள்ள வருணனைச் சொற்களைச் சொல்லிக் கொண்டே எழுதுக.

கண்ணே! மணியே! வண்ணக் கிளியே!

______________ ______________

கட்டிக் கரும்பே! தெவிட்டாக் கனியே!

______________ ______________

இ) வருணனைச் சொற்களைப் படித்துப் பழகுக.

| | |
|---|---|
| பெரிய யானை | கருத்த மேகம் |
| வண்ணத் தோகை | நீண்ட மூங்கில் |
| அகன்ற சாலை | உயர்ந்த மரங்கள் |
| பச்சைப் புல்வெளி | தடித்த புத்தகம் |
| சுழல் காற்று | சிரித்த முகம் |

ஈ) படத்தைப் பார்த்து வருணனைத் தொடர்களை உருவாக்கி எழுதுக.



யானை மிகப்பெரிய விலங்கு. அதற்கு நீண்ட தும்பிக்கை இருக்கிறது; வெண்மையான தந்தங்களும் முறம் போன்ற பெரிய காதுகளும் சிறிய கண்களும் இருக்கின்றன.





உ) உனக்குப் பிடித்த விலங்கின் படத்தை வரைக. அதைப்பற்றி இரண்டு வருணனைத் தொடர்களை எழுதுக.

## தாள் மடித்து உருவம் செய்க.




①


②


③


④




①


②


③


④


⑤


⑥

# 17. குரங்கும் குல்லாய் வியாபாரியும்



ஓர் ஊரில் குல்லாய் வியாபாரி ஒருவர் இருந்தார். ஒரு நாள் அவர், பக்கத்து ஊருக்குக் குல்லாய்களை விற்கச் சென்றார். நெடுந்தொலைவு குல்லாய்க் கூடையுடன் நடந்து சென்றதால் களைப்படைந்தார்.

அவர், வழியிலிருந்த மரத்தின் கீழ் அமர்ந்தார். சிறிது நேரம் ஓய்வெடுத்தார். களைப்பு மிகுதியால் அப்படியே படுத்து உறங்கிவிட்டார். மரத்தின் மேலே சில குரங்குகள் இருந்தன; குல்லாய்களைப் பார்த்து இறங்கிவந்தன; ஒவ்வொன்றும் ஒரு குல்லாயை எடுத்தது; தலையில் குல்லாய்களைப் போட்டுக் கொண்டன.



சிறிது நேரம் கழிந்தது. குல்லாய் வியாபாரி கண்விழித்து எழுந்தார்; கூடையில் இருந்த குல்லாய்களைக் காணவில்லை; சுற்றும் முற்றும் பார்த்தார். மரத்தின் மேலே ஏதோ சத்தம் கேட்டது. அவர் மேலே பார்த்தார்; குரங்குகளின் தலையில் குல்லாய்களைக் கண்டு திடுக்கிட்டார். அவருக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை.

வியாபாரி சிந்தித்தார். தன் தலையிலிருந்த குல்லாயை எடுத்தார்; கூடையில் வீசினார். அதைப் பார்த்த குரங்குகள் தங்கள் தலையிலிருந்த குல்லாய்களை எடுத்தன. கூடையில் வீசி எறிந்தன. அவர் குல்லாய்களை எடுத்துக் கூடையில் வைத்துக் கொண்டு மகிழ்ச்சியுடன் புறப்பட்டார்.

## பயிற்சிகள்

### அ) குறிப்புகளைப் பயன்படுத்திக் கோடிட்ட இடங்களை நிரப்புக.

( களைப்பு மிகுதியால், திடுக்கிட்டார், குல்லாய் வியாபாரி, குல்லாய்களைக், மரத்தின் கீழ், குரங்குகள். )

1. ஓர் ஊரில் ஒரு ________________ இருந்தார்.
2. வழியிலிருந்த ________________ அமர்ந்தார்.
3. ________________ அப்படியே படுத்து உறங்கிவிட்டார்.
4. மரத்தின் மேலே சில ________________ இருந்தன.
5. கூடையில் இருந்த ________________ காணவில்லை.
6. குரங்குகளின் தலையில் குல்லாய்களைக் கண்டு ________________.

### ஆ) சரியா (✓) தவறா (✗) என்று குறியிட்டுக் காட்டுக.

1. ஓர் ஊரில் ஒரு பொம்மை வியாபாரி இருந்தார்.
2. அவர் பக்கத்து ஊருக்குக் குல்லாய்களை விற்கச் சென்றார்.
3. வழியிலிருந்த மலையின் அடியில் அமர்ந்தார்.
4. மரத்தின் மேலே சில கிளிகள் இருந்தன.
5. தன் தலையிலிருந்த குல்லாயை எடுத்து மரத்தின் மேலே வீசினார்.

### இ) வினாக்களுக்கு விடை எழுதுக.

1. குல்லாய் வியாபாரி எங்குச் சென்றார் ?

________________________________________

2. குல்லாய் வியாபாரி பக்கத்துக் கிராமத்திற்குச் சென்றது எதற்காக ?

________________________________________

3. குல்லாய் வியாபாரி எங்கு ஓய்வெடுத்தார் ?

________________________________________

4. கூடையில் என்ன இருந்தது ?

________________________________________

5. கண்விழித்த வியாபாரி திடுக்கிட்டது ஏன் ?

___

___

___

6. வியாபாரிக்கு குல்லாய்கள் எவ்வாறு திரும்பக் கிடைத்தன ?

___

___

___

## ஈ) சொல் விளையாட்டு :

துண்டுத்தாள்களில் கீழ்க்காணும் சொற்களை எழுதுக. ஒரு சிறிய பெட்டியில் போடுக. மாணவர்கள் வட்டமாக அமர்ந்து கொள்க. பெட்டியைச் சுற்றுக்கு விடுக. ஆளுக்கொரு தாளை எடுத்துக் கொள்க. தாளில் இருக்கும் சொல்லைப் படித்து, அதற்கேற்ப நடித்துக் காட்டுக.

ஓடு, நட, படி, எழுது, எடு, வா, போ,

பாடு சாப்பிடு, எழு, தேடு, நில், சிரி உட்கார்,

## உ) பொருத்தமான ஓரெழுத்துச் சொல்லை எடுத்து எழுதுக.

1. மணக்கும் எழுத்து = ______
2. சுடும் எழுத்து = ______
3. பறக்கும் எழுத்து = ______
4. கேட்கும் எழுத்து = ______
5. கொடுக்கும் எழுத்து = ______



## படத்தைப் பார்! உரிய சொற்களை எழுதுக.



- சேவல் கூரையின் ______________ உள்ளது.
  கோழி மரத்தின் ______________ உள்ளது.

மேலே, கீழே

- வாழை மரம் வீட்டின் ______________ உள்ளது.
  தென்னை மரம் வீட்டின் ______________ உள்ளது.

முன்புறம், பின்புறம்

- குரங்கு மரத்தில்______________ செல்கிறது.
  அணில் மரத்திலிருந்து ______________ வருகிறது.

ஏறி, இறங்கி

- பூனை வீட்டிற்கு ______________ ஓடுகிறது.
  நாய் வீட்டிற்கு ______________ குரைக்கிறது.

உள்ளே, வெளியே

- யானை உருவத்தில் ______________
  பூனை உருவத்தில் ______________

சிறியது, பெரியது

## பயிற்சிகள்

அ) பொருத்தமான சொல்லை எடுத்து எழுதுக.

1. ஆமை ____________ நகரும். ( வேகமாக / மெதுவாக )

   மான் ____________ ஓடும்.

2. கரும்பு ____________ ( கசக்கும் / இனிக்கும் )

   பாகற்காய் ____________

3. இறகு ____________ இருக்கும். ( கனமாக / இலேசாக )

   அம்மிக் கல் ____________ இருக்கும்.

4. ஆண் யானைக்குத் தந்தம் ____________ ( உண்டு / இல்லை )

   பாம்புக்குக் கால் ____________

5. பனிக்கட்டி ____________ இருக்கிறது. ( குளிர்ச்சியாக / சூடாக )

   தேநீர் ____________ இருக்கிறது.

ஆ) எதிர்ச்சொல் எழுதுக.

சிறிய X ____________

சரி X ____________

வினா X ____________

முடியும் X ____________

பழைய X ____________

கீழே X ____________

தொடங்கியது X ____________

பிடிக்கும் X ____________

# 18. காட்டுக்குள்ளே கொண்டாட்டம்!




படத்தைப் பார்த்து வினாக்கள் கேட்போம்.

1. இது என்ன விழா?
2. இது எதனுடைய பிறந்த நாள் விழா ?
3. விழா எங்கே நடைபெறுகிறது?
4. பன்னீர் தெளிப்பது எது?
5. குரங்கு என்ன செய்கிறது?
6. ஒளிப்படம் எடுப்பது யார்?

நீயும் வினாக்களை உருவாக்குக.

## பயிற்சிகள்

### அ) படம் இங்கே, வினா எங்கே ? பொருத்துக.

1. மரத்தில் எத்தனை பறவைகள் உள்ளன ?



2. சாலையில் நிற்பவர் யார் ?



3. யானை என்ன செய்கிறது ?



4. வானூர்தி எங்கே பறக்கிறது ?



### ஆ) கோடிடப்பட்ட சொற்கள், விடையாக வருமாறு வினாக்கள் அமைத்து எழுதுக.

**( ஏன், யார், எங்கே, என்ன, எப்படி )**

(எ.கா) 1. என் பெயர் பூங்குழலி.
உன் பெயர் என்ன ?

2. மணியன், கடற்கரைக்குச் சென்றான்.

______________________________?

3. தாத்தா புத்தாடை வாங்கித் தந்தார்.

______________________________?

4. பரிசு கிடைத்ததால் அருள் மகிழ்ந்தான்.

______________________________?

5. குதிரை விரைவாக ஓடியது.

______________________________?

# 19. விரைவில் வருவோம் உன்னிடம்!



நிலா, நிலா, ஓடி வா
நில்லாமல் ஓடிவா
பல காலம் இப்படிப்
பாடிப் பயன் இல்லையே!

மலை மேலே ஏறிநீ
வருவாய் என்றே எண்ணினோம்.
மல்லிகைப் பூக்கொண்டு நீ
தருவாய் என்றும் பாடினோம்.

எத்தனை நாள் பாடியும்
ஏனோ நீயும் வரவில்லை.
சத்தம் போட்டுப் பாடியும்
சற்றும் நெருங்கி வரவில்லை.

உன்னை விரும்பி அழைத்துமே
ஓடி நீ வராததால்
விண்க லத்தில் ஏறியே
விரைவில் வருவோம் உன்னிடம்!

–அழ. வள்ளியப்பா

## பயிற்சிகள்

### அ) பொருள் அறிக.

| | | |
|---|---|---|
| சற்றும் | – | சிறிதும் |
| நெருங்கி | – | அணுகி |
| அழைத்து | – | கூப்பிட்டு |

### ஆ) எதிர்ச்சொல் அறிக.

| | | |
|---|---|---|
| பல | x | சில |
| சத்தம் | x | அமைதி |
| நெருங்கி | x | விலகி |

### இ) சொல்லிக்கொண்டே எழுதுக. சொல்லக்கேட்டு எழுதுக.

உன்னிடம்    எத்தனை    வரவில்லை    விண்கலம்

________   ________   ________   ________

❀ உனக்கு எங்குச் செல்ல ஆசை? எதில் செல்ல ஆசை? கூறு.

# 20. நீல நிற நரி

காட்டில் நரி ஒன்று பசியோடு இருந்தது. உணவு தேடி நகரத்திற்கு வந்தது. அந்த நரியை அங்கிருந்த சில நாய்கள் துரத்தின. நரி ஓடத் தொடங்கியது. விரைவாக ஓடிய நரி, ஒரு சாயத் தொட்டியில் விழுந்தது. உடம்பெல்லாம் நீல நிறமானது. பயந்து போன நரி மீண்டும் காட்டிற்கே திரும்பியது.



நீல நிற நரியைப் பார்த்த விலங்குகள் அஞ்சி ஓடின. அதைக் கண்ட நீல நிற நரிக்கு, ஓர் எண்ணம் தோன்றியது. அனைத்து விலங்குகளையும் அழைத்தது. ''இனி நான்தான் காட்டின் புதிய அரசன். எனக்குத் தேவையான அனைத்தையும் நீங்கள்தான் செய்ய வேண்டும்'' என்று கூறியது.



அனைத்து விலங்குகளும் பயந்தன. நீல நிற நரி சொன்னபடி நடந்து கொள்வதாக உறுதி அளித்தன. விலங்குகள் நாள்தோறும் நரிக்கு உணவு கொடுத்தன. நீல நிற நரி உழைக்காமலேயே வாழ்ந்து வந்தது. தன்னையே காட்டின் அரசனாக நினைத்து கர்வம் கொண்டது.

ஒருநாள், அவையின் நடுவில் விலங்குகள் சூழ, நீல நிற நரி அமர்ந்திருந்தது. அப்போது தொலைவில் வேறு சில நரிகள் ஊளையிடும் சத்தம் கேட்டது. உடனே நீல நிற நரியும் ஊளையிட்டது. அப்போது மழை பெய்யத் தொடங்கியது. மழை நீரில் நரியின் நீல நிறம் சிறிது சிறிதாகக் கரைந்தது. நீல நிற நரியின் சாயம் வெளுத்தது.



அதைக் கண்ட விலங்குகள் அனைத்தும், "புதிய அரசன்" என்று கூறி இதுவரை நரி தங்களை ஏமாற்றியுள்ளதைத் தெரிந்துகொண்டன.

## பயிற்சிகள்

### வினாக்களுக்கு விடை எழுதுக.

1. பசியோடு இருந்த நரி என்ன செய்தது ?
2. நரியின் நிறம் நீலமாக மாறியது எப்படி ?
3. நரியைக் கண்ட காட்டு விலங்குகள் அஞ்சியது ஏன் ?
4. நரியின் நீல நிறம் வெளுத்தது எவ்வாறு ?
5. இக்கதையிலிருந்து நீ அறிந்துகொண்டது என்ன ?

# ஒன்றும் பலவும்

படத்தைப் பார்க்க. படத்தில் உள்ள பொருள்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப வகைப்படுத்தி எழுதுக.



| எண்ணிக்கையில் ஒன்று மட்டும் உள்ளவை | எண்ணிக்கையில் ஒன்றுக்கு மேற்பட்டவை |
| --- | --- |
| ____________ | ____________ |
| ____________ | ____________ |
| ____________ | ____________ |

| ஒன்று | | பல | |
|---|---|---|---|
|  | யானை |  | யானைகள் |
|  | கிளி |  | கிளிகள் |
|  | இலை |  | இலைகள் |
|  | பட்டம் |  | பட்டங்கள் |

படித்துப் பழகுக.

| ஒருமை | | பன்மை |
|---|---|---|
| பழம் | – | பழங்கள் |
| சிங்கம் | – | சிங்கங்கள் |
| பம்பரம் | – | பம்பரங்கள் |
| மாதம் | – | மாதங்கள் |
| சின்னம் | – | சின்னங்கள் |
| காகம் | – | காகங்கள் |
| மரம் | – | மரங்கள் |
| வண்ணம் | – | வண்ணங்கள் |
| புத்தகம் | – | புத்தகங்கள் |
| கடிகாரம் | – | கடிகாரங்கள் |

## பயிற்சிகள்

அ) சொற்களைப் படித்து ஒருமை, பன்மைக்குரிய கட்டத்தில் எழுதுக.

குருவிகள், கொக்குகள் , நத்தை, மான்கள், புலி, குரங்குகள், அணில், பறவை, மீன்கள் , பழங்கள், முயல், மரம்

| ஒன்று | பல |
|---|---|
| | |
| | |
| | |
| | |
| | |
| | |

ஆ) ஒருமைக்கேற்ற பன்மைச் சொல்லை எழுதுக.

| | | | |
|---|---|---|---|
| செடி | ______ | சட்டை | ______ |
| மேசை | ______ | குரங்கு | ______ |
| வீடு | ______ | இலை | ______ |
| நாற்காலி | ______ | காய் | ______ |
| வளையல் | ______ | பறவை | ______ |
| விண்மீன் | ______ | வண்டி | ______ |
| மிதிவண்டி | ______ | வழி | ______ |

இ) ஒருமையிலும் பன்மையிலும் உள்ள கோடிட்ட இடங்களை நிரப்புக.

| ஒருமை | பன்மை | ஒருமை | பன்மை |
|---|---|---|---|
| ஆடு | ______ | மீன் | ______ |
| ______ | பறவைகள் | ______ | உடைகள் |
| குடம் | ______ | ______ | சன்னல்கள் |
| ______ | படங்கள் | பட்டம் | ______ |

# 21. பச்சைக் கிளியே!



பச்சைக் கிளியே! வா; வா;
பாலும் சோறும் உண்ணவா;
கொச்சி மஞ்சள் பூசவா;
கொஞ்சி விளையாட வா!



வட்ட மாயுன் கழுத்திலே
வான வில்லை ஆரமாய்,
இட்ட மன்னர் யாரம்மா?
நான் அறியக் கூறம்மா!



பையப் பையப் பறந்து வா,
பாடிப் பாடிக் களித்து வா;
கையில் வந்தி ருக்கவா
கனி யருந்த ஓடிவா.

– கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

## பயிற்சிகள்

அ) இரண்டாம் எழுத்து ஒன்றுபோல் உள்ள சொற்களை எடுத்தெழுதுக.

பச்சை __________ __________

கொச்சி __________ __________

ஆ) சொல்லிக்கொண்டே எழுதுக. சொல்லக் கேட்டு எழுதுக.

| | | |
|---|---|---|
| பச்சைக் கிளியே | பாலும் சோறும் | கொச்சி மஞ்சள் |
| __________ | __________ | __________ |
| விளையாட வா | வானவில் | பறந்து வா |
| __________ | __________ | __________ |

இ) ஒத்த ஓசையில் தொடங்கும் சொற்களை அட்டவணைப்படுத்துக.

(மான், ஆறு, பால், ஆடு, ஆமை, பாடு, மாலை, மாடு, பாறை, பாதை, மாடி, ஆணி)

| ஆடு | மான் | பால் |
|---|---|---|
| ஆறு | | |
| ஆமை | | |
| ஆணி | | |

ஈ) ஒத்த ஓசையில் முடியும் சொற்களை அட்டவணைப்படுத்துக.

( ஆடு, சிலை, வீடு, வலை, வடி, கூடு, தலை, படி, மலை, செடி, காடு, கொடி )

| ஆடு | செடி | சிலை |
|---|---|---|
| வீடு | | |
| கூடு | | |
| காடு | | |

உ) சொல் விளையாட்டு :

- வகுப்பில் இருவர் இருவராகச் சேர்ந்து அமருங்கள்.
- ஒருவர் ஒரு சொல்லைக் கூற அதனோடு ஒத்த ஓசை உடைய சொல்லை அடுத்தவர் கூறவேண்டும்.
- தொடர்ந்து இருவரும் மாறி மாறி ஒத்த ஓசை உடைய சொற்களைக் கூற வேண்டும்.
- அதிக எண்ணிக்கையில் சொற்களைக் கூறுபவர் வெற்றி பெறுவார்.
- தொடர்ந்து ஒத்த ஓசை உடைய சொற்களைக் கூற முடியாதவர், புதிய சொல்லைக் கூறி மீண்டும் தொடங்க வேண்டும்.

படங்களுக்குரிய சொற்களைப் பகர வரிசையில் எழுதுக.














1. ______________________
2. ______________________
3. ______________________
4. ______________________
5. ______________________
6. ______________________
7. ______________________
8. ______________________
9. ______________________
10. ______________________
11. ______________________
12. ______________________

# 22. சேமிக்கப் பழகுவோம்





இல்லை, இல்லை. நான் எனக்குத் தேவையான உணவைச் சேமித்து வைத்திருக்கிறேன்.



அப்படியா! நாங்கள் மட்டும் தான் உணவில்லாமல் தவிக்கிறோமா!



கவலையை விடுங்கள் நான் உங்களுக்கு உணவு தருகிறேன்,



சேமிப்பின் அவசியத்தை உணர்ந்துகொண்டோம் . மிக்க நன்றி.



வண்ணம் தீட்டி மகிழ்க.

- உன்னிடம் உள்ள நல்ல பழக்கங்கள் இரண்டனைக் கூறுக.
- உன் நண்பனிடம் உள்ள நல்ல பழக்கங்கள் இரண்டனைக் கூறுக.

**செயல் திட்டம்**

ஏதேனும் ஒரு கதைக்குப் பொருத்தமான படங்களைச் சேகரித்து உன் படத்தொகுப்பில் ஒட்டுக. கதைக்குப் பொருத்தமான தொடர்களை எழுதுக.

# 23. பழந்தமிழ் மொழி

உலகிலேயே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகப் பேசப்பட்டும் எழுதப்பட்டும் வரும் பழமையான மொழி நம் தமிழ்மொழி. தமிழ் மொழி தனித்து இயங்கும் தன்மையுடையது. தமிழ்மொழியில் இருந்து தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு ஆகிய மொழிகள் தோன்றியுள்ளன.



தமிழரின் தொன்மையை வெளிப்படுத்தும் சான்றுகளான இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட நாணயங்கள், முத்திரைகள், மற்றும் மோதிரங்கள்.

பழங்காலத் தமிழர்கள் பயன்படுத்திய வெள்ளி, செப்பு நாணயங்களில் மன்னர்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டு இருந்தன. தமிழ் மன்னர்கள் செதுக்கி வைத்துள்ள கல்வெட்டுகளில் அவர்களின் புகழ், வெற்றி ஆகியவை குறிக்கப்பட்டுள்ளன. தமிழர்கள் இரும்பு ஆணி கொண்டு எழுதியுள்ளனர் என்பது பூமிக்கடியில் இருந்து தோண்டி எடுக்கப்பட்ட பானை ஓடுகளின் சில்லுகளிலிருந்து கண்டறியப்பட்டுள்ளது. தமிழர்கள் பழங்காலத்திலேயே பொன், வெள்ளி, செம்பு போன்ற உலோகங்களாலான மோதிரங்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

முற்காலத் தமிழ் மன்னர்களான சேர, சோழ, பாண்டியர் காலத்தால் அழியாத கலைக் கோவில்களைக் கட்டியுள்ளனர். சோழ மன்னர் இராசராசனால் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட தஞ்சைப் பெரிய கோவில், தற்போதும் உறுதியுடன் விளங்குகிறது. கரிகால் சோழன், காவிரியாற்றின் குறுக்கே கட்டிய கல்லணை இன்றும் பயன் தருவதாக உள்ளது. இலக்கியங்கள், கோவில்கள், கல்வெட்டுகள், நாணயங்கள் போன்றவை தமிழின் பழமைக்குச் சான்றுகளாய் விளங்குகின்றன.

"தமிழுக்கும் அமுதென்று பேர் – அந்தத்
தமிழ் இன்பத்தமிழ் எங்கள் உயிருக்கு நேர்!"

– பாரதிதாசன்

பெயரைக் குறிக்கும் சொற்களை அடிக்கோடு இடுக. எடுத்து எழுதுக.

1. முருகன் ஓடினான். முருகன்
2. விதை முளைத்தது. விதை
3. நாய் குரைக்கும். ______
4. அன்பரசன் படிக்கிறான். ______
5. பூ மலர்ந்தது. ______
6. எறும்புகள் வரிசையாகச் செல்கின்றன. ______
7. மல்லிகா ஆடுகிறாள். ______
8. குழந்தை சிரித்தது. ______
9. பேருந்து ஓடியது. ______
10. விமானம் பறந்தது. ______

பொருந்தாததை வட்டமிடுக.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | மல்லிகை | தாமரை | தக்காளி | செம்பருத்தி |
| 2. | மஞ்சள் | இனிப்பு | பச்சை | சிவப்பு |
| 3. | மயில் | பசு | நாய் | பூனை |
| 4. | மேசை | திராட்சை | நாற்காலி | கரும்பலகை |
| 5. | பேருந்து | மிதிவண்டி | விமானம் | மீன் |

## பயிற்சிகள்

அ) உனக்குப் பிடித்த இரண்டு விளையாட்டுப் பொருள்களின் பெயர்களை எழுதுக.

______ ______

ஆ) நீ வாங்க விரும்பும் நான்கு பொருள்களின் பெயர்களை எழுதுக.

______ ______ ______ ______

# 24. நூலகத்தில் நாம்

மேகலை நூலகத்தில் படித்தவை, செய்து மகிழ்ந்தவை இங்கே கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றை நீயும் அறிந்து கொள்க! செய்து பார்த்து மகிழ்க !





குடை கூடை

மழை பெய்தால் நமக்கு வேண்டும்
குடை, குடை, குடை
காய்கறி வாங்க நமக்குத் தேவை
கூடை, கூடை





யானை, புலி வசிக்கும் இடம்
வனம், வனம், வனம்
சூரியன் சந்திரன் தோன்றும் இடம்
வானம், வானம்





நெல்லும் கரும்பும் விளையுமிடம்
நிலம், நிலம், நிலம்
வானம் எங்கும் பரவிக் கிடக்கும்
நீலம், நீலம்.





உயர்ந்து நின்று வானைத் தொடும்
மலை, மலை, மலை.
ரோசா மல்லிகை சேர்த்து தொடுத்த
மாலை, மாலை.

✸ நரியாரின் புல்லாங்குழல் இசையைக் கேட்க வந்திருப்பவர்கள் யார் யார் ? எழுதுக.



____________________

____________________

____________________

____________________

____________________

* யாருடைய காலடி ? கண்டுபிடித்துப் காலடிச் சுவடுகளை உருவத்துடன் பொருத்துக.



* வண்ணம் தீட்டி மகிழ்க. பழங்களின் பெயர்களை எழுதுக.



# செய்து பார்ப்போம்

ஒரு சதுர வடிவ அட்டையை எடுத்துக் கொள்க.



அட்டையைக் கீழ்க்காணுமாறு ஏழு துண்டுகளாக வெட்டிக்கொள்க.




கீழ்க்காணும் வடிவங்களை உருவாக்குக.



விடைக்குறிப்புகள்




உன் விருப்பம் போல் வேறு வடிவங்களை உருவாக்குக.

---

கீழ்க்காணும் படங்களில் உள்ள பறவைகள் விலங்குகளைக் கண்டறிந்து பெயர்களைக் கூறுக.





❀ நூலகத்தில் உள்ள நூல்களைப் பயன்படுத்துக.
எளிய கதைகளையும் பாடல்களையும் படித்து மகிழ்க.

## பள்ளி நூலகத்தைப் பயன்படுத்துக.

| வரிசை எண் | புத்தகத்தின் பெயர் | புத்தகத்தின் தன்மை (பாடல், கதை, படக்கதை, புதிர்கள்) | கருத்து | | |
|---|---|---|---|---|---|
| | | | மிகவும் பிடித்தது | பிடித்தது | குறிப்பு |
| | | | | | |
| | | | | | |
| | | | | | |
| | | | | | |
| | | | | | |

## வரைந்து வண்ணம் தீட்டி மகிழ்க.





# 25. பட அகர முதலி

(ககர வரிசை சொற்கள்)



## கடல்குதிரை

கடலில் வாழும் ஓர் உயிரினம். இது செங்குத்தாக நின்று நீந்தும். குதிரையைப் போன்ற தோற்றமுடையது.



## காண்டாமிருகம்

இது காட்டில் வாழும் விலங்கு. இதன் மூக்கில் கொம்பு முளைத்திருக்கும். இதன் தோல் தடிப்பானது. இது இரவில் இரை தேடச்செல்லும்.



## கிளி

கிளி பல நிறங்களில் காணப்படும் ஓர் அழகிய பறவை. பச்சை நிறக் கிளியை பச்சைக் கிளி என அழைப்பர். இதன் அலகு வளைந்து சிவப்பு நிறத்தில் இருக்கும். இது மரப்பொந்தில் வாழும்.



## கீரி

வயல்வெளி மற்றும் புதர்களில் வாழும் சிறிய விலங்கு கீரி. இதைக் கீரிப்பிள்ளை என்பர்; தானியங்கள், புழு, பூச்சிகள், நத்தை, பாம்பு முதலியவற்றை உண்ணும்.



## குறிஞ்சிமலர்

இது பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை மலரும் மலர்; மலைப் பகுதிகளில் வளரும்.



## கூகை

இது ஒரு வகை பறவை. இதனை ஆந்தை என்றும் கூறுவர்; பகலில் ஓய்வெடுக்கும்; இரவில் உணவு தேடும்; இரவில் நன்றாகப் பார்க்கும் திறன் உடையது. வயலில் தானியங்களை உண்ணும் எலிகளை, வேட்டையாடுவதால் கூகையை உழவர்களின் நண்பன் என்பர்.



## கெளுத்தி மீன்

இது ஒரு வகை மீன். முகத்தில் முள் இருக்கும். ஏரி, குளங்களில் வாழும். கடலில் பெரிய கெளுத்தி மீன்கள் இருக்கும்.



## கேடயம்

இது பழங்காலப் போர்களில் பயன்படுத்தப்பட்ட ஒரு கருவி. எதிரிகள் தாக்கும்போது தற்காத்துக்கொள்ளப் பயன்படும்.



## கைக்கடிகாரம்

கைகளில் அணியும் ஓர் அணிகலன். நேரத்தைத் துல்லியமாக அறிவதற்குப் பயன்படுகிறது. பல வண்ணங்களிலும் வடிவங்களிலும் உள்ளது.



## கொக்கு

இது பறவை இனத்தைச் சார்ந்தது. மீன்களைப் பிடித்து உண்ணும். இதற்கு நீண்ட கால்களும், நீண்ட கழுத்தும் கூர்மையான ஈட்டி போன்ற அலகும் உண்டு. நீர் நிலைகளின் அருகில் வாழும்.



## கோட்டை

பழங்கால மன்னர்களால் பாதுகாப்புக்காக, உறுதியாகவும் உயரமாகவும் அமைக்கப்பட்ட மதில் சுவர். எதிரிகள் நுழையாதவாறு அகழி சூழ்ந்திருக்கும்.



## கௌதாரி

கோழி இனத்தைச் சார்ந்த சிறிய பறவை. தரையைக் கிளறிச் சிறிய குழி உண்டாக்கும். அதில் புல் அல்லது இலைகளை நிரப்பி முட்டையிடும்.

அ, ஆ வரிசைப் படங்களுக்குரிய சொற்களை எழுதுக. படங்களுக்கு வண்ணம் தீட்டி மகிழ்க.

   

_______ _______ _______ _______

   

_______ _______ _______ _______

   

_______ _______ _______ _______

### செயல் திட்டம்

- அ, ஆ வரிசைச் சொற்களுக்குரிய, படங்களை தனித்தாளில் வரைக. வண்ணம் தீட்டுக. படத்தொகுப்பில் ஒட்டுக.
- நீ தயாரித்த படத்தொகுப்பை உன் பெற்றோர்களுக்கும் நண்பர்களுக்கும் படித்து காட்டிப் மகிழ்க.

# 26. வடமொழி ஒலிப்புகளுக்கான எழுத்துகள்

பாடிப் பழகுக.



பஞ்சாப் செல்லலாம்
பாதுஷா வாங்கலாம்.



இராமேஸ்வரம் செல்லலாம்
இரஸகுல்லா வாங்கலாம்.



குஜராத் செல்லலாம்
குலோப் ஜாமுன் வாங்கலாம்.



ஸ்ரீநகர் செல்லலாம்
ஜிலேபி வாங்கலாம்.

தேடித்தேடி வாங்கியே
கூடிக் கூடித் தின்னலாம்.

ஒலித்துப் பழகுங்கள். எழுதிப் பழகுங்கள்.

ஜ் ஜ ஜா ஜி ஜீ ஜு ஜெ ஜே ஜை ஜொ ஜோ

ஸ் ஸ ஸா ஸி

ஷ் ஷ ஷா ஷி ஷீ ஷு ஷை

ஹ் ஹ ஹா ஹி ஹீ ஹு ஹை

ஸ்ரீ

படம் பார்த்துப் படித்துப் பழகுக.



ஷாஜஹான்



சுபாஷ்சந்திரபோஸ்



ஜான்சிராணி



சர்க்கஸ்



தாஜ்மஹால்



ரோஜா

படித்துப் பழகுக.

| | | |
|---|---|---|
| ஜப்பான் | ஜெய்ஹிந்த் | கிறிஸ்துமஸ் |
| ஜனாதிபதி | காஷ்மீர் | ஸ்ரீநகர் |
| ஜாடி | எவரெஸ்ட் | மஹால் |
| ஜிலேபி | நேதாஜி | ஜவஹர்லால்நேரு |

சொல்லிக்கொண்டே எழுதுக. சொல்லக் கேட்டு எழுதுக.

ஆங்கில மாதங்கள்

| | |
|---|---|
| 1. ஜனவரி | 7. ஜூலை |
| 2. பிப்ரவரி | 8. ஆகஸ்டு |
| 3. மார்ச்சு | 9. செப்டம்பர் |
| 4. ஏப்பிரல் | 10. அக்டோபர் |
| 5. மே | 11. நவம்பர் |
| 6. ஜூன் | 12. டிசம்பர் |

## பயிற்சிகள்

அ) மாறுபட்ட எழுத்தைக் கோடிட்ட வட்டமிட்டுப் படிக்க.

| | | | | |
|---|---|---|---|---|
| <u>ஊ</u> | <u>ஊ</u> | ஷா | <u>ஊ</u> | <u>ஊ</u> |
| ள் | ள் | ள் | ள் | ஸ் |
| ஐ | ஐ | ஐ | ஐ | ஐ |
| ஹா | றா | றா | றா | றா |
| றீ | றீ | றீ | ஸ்ரீ | றீ |

ஆ) கீழ்க்காணும் தின்பண்டங்களின் பெயர்களை எழுதுக.







______________ ______________ ______________

இ) விடுபட்ட எழுத்துக்களை நிரப்புக.

எவரெ – ட்

சுபா – சந்திர போ –

நேதா –

சர்க்க –

கிறி – தும –

ஜெய் – ந்த்

ரோ –

– ன்சிராணி

கா – மீர்

ஆக – டு

# 27. செய்யுள் பகுதி

## 1. ஆத்தி சூடி

அறம் செய விரும்பு.
ஆறுவது சினம்.
இயல்வது கரவேல்.
ஈவது விலக்கேல்.
உடையது விளம்பேல்
ஊக்கமது கைவிடேல்.
எண் எழுத்து இகழேல்.
ஏற்பது இகழ்ச்சி.
ஐயம் இட்டு உண்.
ஒப்புரவு ஒழுகு.
ஓதுவது ஒழியேல்.
ஔவியம் பேசேல்.

– ஔவையார்

### பொருள் அறிக

| | | |
|---|---|---|
| அறம் | – | நல்ல செயல்கள் |
| ஆறுவது | – | தணிவது |
| கரவேல் | – | மறைக்காதீர் |
| ஈவது | – | கொடுப்பது |
| விளம்பேல் | – | சொல்லாதீர் |
| ஊக்கம் | – | முயற்சி |
| இகழேல் | – | வெறுக்கா தீர் |
| ஒப்புரவு | – | நற்செயல் |
| ஓதுவது | – | படிப்பது |
| ஔவியம் | – | பொறாமை |

## 2. கொன்றை வேந்தன்

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்.
ஏவா மக்கள் மூவா மருந்து.
குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை.
கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி.
சுற்றத்திற்கு அழகு சூழ இருத்தல்.
திரைகடல் ஓடியும் திரவியம் தேடு.
நுண்ணிய கருமம் எண்ணித் துணி.
முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.
மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்.

–ஔவையார்

### பொருள் அறிக

| | | |
|---|---|---|
| அன்னை | – | தாய் |
| பிதா | – | தந்தை |
| முன்னறி | – | கண்முன்னே காணக்கூடிய |
| எண் | – | கணக்கு |
| எழுத்து | – | இலக்கணம் |
| ஏவா | – | கட்டளையிடாமலேயே |
| மக்கள் | – | பிள்ளைகள் |
| மூவா மருந்து | – | முதுமை அடையாமல் காக்கும் மருந்து |
| சுற்றம் | – | உறவினர் |
| மெய்ப்பொருள் | – | நிலைத்த செல்வம் |
| திரவியம் | – | செல்வம் |
| கருமம் | – | செயல் |
| எண்ணித் துணி | – | சிந்தித்து முடிவு செய். |
| அமிர்தம் | – | உயிர்காக்கும் மருந்து |

## 3. உலக நீதி

ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்;
ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்;
மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்;
வஞ்சனைகள் செய்வாரோடு இணங்க வேண்டாம்;
போகாத இடந்தனிலே போக வேண்டாம்;
போகவிட்டுப் புறஞ்சொல்லித் திரிய வேண்டாம்;
அஞ்சாமல் தனிவழியே போக வேண்டாம்;
அடுத்தவரை ஒருநாளும் கெடுக்க வேண்டாம்;
சேராத இடந்தனிலே சேர வேண்டாம்;
செய்தநன்றி ஒருநாளும் மறக்க வேண்டாம்;

– உலகநாதர்

### பொருள் அறிக.

| | | |
|---|---|---|
| ஓதாமல் | – | படிக்காமல் |
| பொல்லாங்கு | – | தீமை |
| மாதா | – | அம்மா |
| வஞ்சனை | – | தீய செயல்கள் |
| இணங்க வேண்டாம் | – | சேரவேண்டாம் |
| இடந்தனிலே | – | இடத்திற்கு |
| புறஞ் சொல்லி | – | குறை கூறி |
| அஞ்சாமல் | – | பயப்படாமல் |
| அடுத்தவர் | – | மற்றவர் |
| செய்தநன்றி | – | செய்த உதவி |

# திறன் பகுதி / திறன்

| திறன் பகுதி | திறன் | பாடப்பகுதி |
|---|---|---|
| 1.கேட்டல் | இயற்கை சார்ந்த பாடல்களைக் கேட்டறிதல் | பசுவும் கன்றும் (பாடல்)<br>சேவல் கூவுது (பாடல்) |
| | சிந்தனையைத் தூண்டும் கதைகளைக் கேட்டறிதல் | வீடு எங்கே ?<br>சிறியகோடு பெரியகோடு<br>சட்டை யாருக்கு ?<br>யார் ? யார் ? யார் ? (பாடல்) |
| | குழு அறிமுக உரையாடலைக் கேட்டறிதல் | என்னைப் பற்றி நானே... |
| 2.பேசுதல் | தன்னைச் சுற்றியுள்ளவை சார்ந்த விவரங்களைப் பேசுதல் | கண்டதும் கேட்டதும்... |
| | உரிய ஒலிப்புடன் பாடுதல் (ல,ள,ழ, எழுத்துகள் அமைந்த பாடல்கள் | நாடிப்பயில்வோம்! (பாடல்)<br>விரைவில் வருவோம் உன்னிடம்(பாடல்) |
| | படக் கதையைப் பார்த்து நிகழ்வைக் கூறுதல். | பந்து எங்கே ?<br>தவளையின் தந்திரம் |
| | வினா எழுப்பும் திறன் | காட்டுக்குள்ளே கொண்டாட்டம்! |
| 3.படித்தல் | படங்களோடு கூடிய சொற்களைப் படித்தல் | பார்ப்போம் படிப்போம் |
| | எளிய சந்தப் பாடல்களைப் பாடுதல் | ஓடி விளையாடு பாப்பா (பாடல்) |
| | உரிய ஒலிப்புடன் உரக்கப் படித்தல்<br>சிறுவர் படக்கதைகளைப் படித்தல் | வழி பிறந்தது<br>நானும் கூட..<br>சேமிக்கப் பழகுவோம்! |
| | வடமொழி ஒலிப்புகளுக்கான எழுத்துகளை அடையாளங்கண்டு படித்தல் | வடமொழி ஒலிப்புகளுக்கான எழுத்துகள் |
| 4.எழுதுதல் | படங்களைப் பார்த்துப் பெயரை எழுதுதல் | பயிற்சிகள் |
| | படங்களைப் பார்த்துச் சிறுதொடர் எழுதுதல் | படம் பார்த்துத் தொடர்எழுதுக |
| | எளிய கதையிலிருந்து வினாக்களுக்கு ஏற்ற விடை எழுதுதல் | குரங்கும் குல்லாய் வியாபாரியும்,நீலநிறநரி |
| | சொற்களைச் சொல்லக் கேட்டு எழுதுதல் | பயிற்சிகள் |
| | எளிய வருணனைச் சொற்களை அடையாளம் கண்டு எழுதுதல் | கண்ணே! மணியே! (பாடல்) |
| | வடமொழி ஒலிப்புகளுக்கான எழுத்துகளை எழுதுதல் | வடமொழி ஒலிப்புகளுக்கான எழுத்துகள் |
| 5.படைப்பாற்றல் | விரும்பிய படம் வரைந்து வண்ணம் தீட்டுதல் | படம் வரைந்து வண்ணம் தீட்டி மகிழ்க |
| | காகித மடிப்புகளைக் கொண்டு உருவம் செய்தல். | தாள் மடித்து உருவம் செய்க.<br>செய்து பார்ப்போம் |
| | பெருவிரல் அச்சிலிருந்து உருவங்கள் உருவாக்குதல். | விரலில் ‘மை’ தொட்டு அச்சிட்டு மகிழ்க. |
| | கதை கூறுதல் | பயிற்சிகள் |
| | செயல்திட்டம் | பயிற்சிகள் |
| 6.நடைமுறை இலக்கணம் | ஒத்த ஓசையுடைய சொற்களை உருவாக்குதல் | பச்சைக் கிளியே! &<br>பாடல்களின் பின் வரும் பயிற்சிகள் |
| | ஒருமை, பன்மை அறிதல் | ஒன்றும் பலவும் – பயிற்சிகள் |
| 7.தானே கற்றல் | எளிய பட அகரமுதலியைப் பயன்படுத்துதல் | பட அகராதி |
| | சொற்களை அகரவரிசைப்படுத்துதல் | பயிற்சிகள் |
| 8.சொற்களஞ்சியப் பெருக்கம் | சொல் விளையாட்டு | பயிற்சிகள் |
| | பெயர்ச் சொற்களை அறிதல் | பயிற்சிகள் |
| | எதிர்ச்சொற்கள் அறிதல் | பயிற்சிகள் |
| | சொல்லின் இறுதி எழுத்தைக் கொண்டு சொல்லை உருவாக்குதல். | பயிற்சிகள் |
| | ஆத்திசூடி(ஔவையார்), | ஆத்திசூடி(ஔவையார்), |
| | கொன்றை வேந்தன், | கொன்றை வேந்தன், |
| | உலகநீதி | உலகநீதி |
| | நூலகத்திலுள்ள குழந்தை நூல்களைப் படிக்க உதவுதல். | நூலகத்தில் நாம்! |